[5th February 1959

**Sri A. VEDARATHNAM:** இப்போது குறிப்பிடப்பட்ட இந்த அணைக் கட்டுகள் தவிர மற்ற புதிய அணைக்கட்டுகளிலும் இத்தகைய பூங்காக்களை அமைக்க அரசாங்கம் உத்தேசிக்குமா? அவ்வாறு செய்ய அரசாங்கம் முன் வருமா?

**The Hon. Sri P. KAKKAN:** புதிய அணைக்கட்டுகள் கட்டப்பட்ட பிறகு அது பற்றி யோசிக்கப்படும்.

## *Veterinary Hospitals*

*22 *Q.*—**Sri V. K. KOTHANDARAMAN:** கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு ஜில்லாவில் எத்தனை, என்னென்ன விதமான கால் நடை ஆஸ்பத்திரிகள் இருக்கின்றன (தாலூகாவாரியாக)?

(ஆ) ஒவ்வொரு ஆஸ்பத்திரியும் எந்தெந்தத் தேதியில் ஆரம்பிக்கப் பட்டது?

(இ) 1955 முதல் 1957 வரை வருட வாரியாக எத்தனைப் பிராணி களுக்கு வைத்திய சிகிச்சை கொடுக்கப்பட்டது?

(ஈ) பிர்க்காவுக்கு ஒரு கால்நடை ஆஸ்பத்திரி ஏற்படுத்த உத்தேச முண்டா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM:** (*a*) to (*c*) A statement[a] is placed on the table of the House.

(*d*) At present there is no proposal to start one veterinary dispensary for each firka.

**Sri V. K. KOTHANDARAMAN:** மேஜையில் வைக்கப்பட்டிருக்கும் ஸ்டேட்மெண்டில், 3 தாலூகாக்களில் கால் நடை ஆஸ்பத்திரி களும், 5 தாலூகாக்களில் கால்நடை டிஸ்பென்ஸரிகளும், மற்ற தாலூ காக்களில் மைனர் கால்நடை டிஸ்பென்ஸரிகளும் இருப்பதாகக் குறிப் பிடப்பட்டிருக்கிறது. இன்றுள்ள நிலைமையில் கால்நடைகளுக்கு போது மான பாதுகாப்பு இருக்க வேண்டுமானால் ஒவ்வொரு தாலூகாவிற்கும் ஒரு கால்நடை ஆஸ்பத்திரியும் ஒவ்வொரு பிர்க்காவிற்கும் ஒரு கால்நடை டிஸ்பென்ஸரியும் இருக்கவேண்டும் என்று கருதி, கால்நடை ஆஸ்பத்திரி களையும் கால் நடை டிஸ்பென்ஸரிகளையும் அந்த முறையில் அமைப்ப தற்கு அரசாங்கத்தார் உடனடியாக முன் வருவார்களா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM:** 102 தாலூகாக் கள் இருக்கின்றன. 112 ஒழுங்கான வெடெரினரி ஸ்தாபனங்களும் இருக் கின்றன. மற்றவை மைனர் டிஸ்பென்ஸரிகள். ஆனால் பிர்க்காவிற்கு ஒரு வெடரினரி வைத்திய ஸ்தாபனம் வீதம் அவைகளை அமைப்பது சிரமம்; ஒவ்வொரு தாலூகாவிற்கும் ஒன்று நிச்சயமாக இருக்கும்.

**Sri A. A. RASHEED:** What is the number of hospitals in North Arcot district without veterinary doctors and may I know when the doctors will be appointed?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM:** I have no information, Sir.

---

[a] Printed as Appendix II on pages 91-92 infra.

5th February 1959]

SRI A. VEDARATHNAM : இப்போது, இதுவரை திறக்கப்பட்டிருக்கும் அத்தனை கால்நடை ஆஸ்பத்திரிகளிலும் டாக்டர்கள் இருக்கிறார்களா ? அப்படி இல்லையானால், டாக்டர்கள் இல்லாத ஆஸ்பத்திரிகளுக்கெல்லாம் டாக்டர்களை நியமிப்பதற்கு அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அனேகமாக எல்லா கால்நடை ஆஸ்பத்திரிகளிலும் டாக்டர்கள் இருக்கிறார்கள். ஆனால் ஒன்றிரண்டு இடங்களில் போதுமான டாக்டர்கள் கிடைக்காமல் இருக்கலாம். டாக்டர்கள் பற்றாக்குறை இருக்கிறது. இதை சமாளிப்பதற்கு "ஸ்டாக் மென்" இருக்கவேண்டும்.

SRI M. K. SOMASUNDARAM : கால்நடை ஆஸ்பத்திரிகளில் டாக்டர்கள் இல்லை என்ற பிரச்னை பெருவாரியாக இன்னும் இருந்து வருகிறது. எனவே, உத்தியோகத்தை விட்டுவிட்டு வெளியேறும் டாக்டர்களை கட்டாயமாக இந்த ஆஸ்பத்திரிகளில் நியமிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கால்நடை டாக்டர்களின் நிலைமை மனிதர்களுக்கு வைத்தியம் பார்க்கும் டாக்டர்களின் நிலைமையைப் போன்றது அல்ல. கால்நடை டாக்டர்களுக்கான பரீக்ஷை பாஸ் பண்ணினவர்கள் இந்த ஸ்தாபனங்களில் வேலைக்கு வந்துதான் ஆகவேண்டும். அவர்களுக்கு தனியாக உத்தியோகம் கிடைப்பதில்லை. வேண்டுமானால், அவர்கள் வேறு ராஜ்யங்களுக்குப் போகலாம். கிடைக்கும் கால்நடை டாக்டர்களைக் கொண்டு இந்த ஆஸ்பத்திரிகள் நடத்தப்பட்டு வருகின்றன.

*23 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

S.P.C.A. உள்ள இடங்களிலெல்லாம் கால்நடை ஆஸ்பத்திரிகள் வைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Regular veterinary institutions (either veterinary hospital or veterinary dispensary) are functioning already at all places where S.P.C.A. are functioning, except Ayyampet. The veterinary dispensary at Papanasam which is only at a distance of five miles serves the needs of Ayyampet.

SRI M. KALYANASUNDARAM : : மாடுகள் வைத்துக் கொண்டிருக்கும் விவசாயிகளுக்கு S. P. C. A. ஸ்தாபனத்தால் நன்மையை விடத்தீமைதான் அதிகமாக ஏற்படுகிறது என்பதை சர்க்கார் அறிவார்களா ? அந்தக் காரணத்தால் இந்த ஸ்தாபனத்தை சர்க்கார் மூடுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினரைப் போன்ற ஒரு சிலர் இம்மாதிரியான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். அது சரி அல்ல.

## *Hindi*

*24 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இம்மாநில ஆரம்பப் பள்ளிகளில் ஹிந்தி எந்த வகுப்பிலிருந்து போதிக்கப்படும் ?